28th March 1961]

SRI A. K. THANGAVEL MUDALIAR : குறுகிய பாலங்களையும், வாராவதிகளையும் அகலப்படுத்த சர்க்காருக்கு உத்தேசம் உண்டா? அப்படியானால் எப்போது அதை நிறைவேற்ற முடியும்?

THE HON. SRI P. KAKKAN : இந்த விபத்து நடந்த இடத்தில் புதிதாகப் பாலம் கட்ட திட்டமிடப்பட்டிருக்கிறது. பாலம் கட்டும் வரை பை-பாஸ் ரோடாக இருக்க ரூ. 11,800 செலவில் ரோடு போட்டிருக்கிறோம். ரூ. 35,000 செலவில் 1961-62-ல் புதிய பாலம் கட்டுவதற்குத் திட்டமிட்டிருக்கிறோம். வேலை துரிதமாக நடக்க வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகிறது.

SRI A. K. THANGAVEL MUDALIAR : குறுகிய ரோடுகள் பூராவையும் இப்போது சீர்திருத்தம் செய்யமுடியுமா?

THE HON. SRI P. KAKKAN : இது பாலங்கள் சம்பந்தப்பட்ட கேள்வி. ரோடுகளைப் பற்றியல்ல.

SRI M. ETHIRAJALU : நெய்வேலித் தொழிற்சாலை ஏற்பட்டிருக்கிறதால் பெரிய இயந்திரங்கள் அந்த ரோடுகள் வழியாகப் போகமுடியாமல் இருக்கிறது. அதைத் தவிர்க்க வேறு ரோடு போடவேண்டுமென்று சொல்லப்படுகிறது. அது உண்மையா?

THE HON. SRI P. KAKKAN : நெய்வேலித் திட்டம் ஏற்பட்டதன் காரணமாகத்தான் இந்த பாலங்களை நல்ல முறையில் செப்பனிடப்படவேண்டுமென்றும், சாமான்கள் மெஷின்கள் போகும் போது சேதமிருக்கக்கூடாது என்றும் எல்லாப் பாலங்களையும் நன்றாகப் பார்த்து கவனித்துக் கட்டுவதற்கு ஏற்பாடு செய்து வருகிறது.

DR. A. SREENIVASAN : இந்தப் பாலங்கள் சம்பந்தப்பட்டவரை பிரஷர் டெஸ்ட், லோடு டெஸ்ட் என்று 6 மாதத்திற்கு ஒரு தடவை 12 மாதங்களுக்கு ஒரு தடவை செய்யவேண்டுமென்று இருக்கிறதே, அதை இஞ்சினியரிங் ஸ்டாப் செய்துவருகிறார்களா?

THE HON. SRI P. KAKKAN : இப்போது லோடு டெஸ்ட் வைத்து பரிசீலனை செய்வதற்கு ஏற்பாடு செய்துவருகிறோம்.

MR. CHAIRMAN : Questions are over.

[*Note.*—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

## II.—ANNOUNCEMENTS.

### (1) MESSAGE FROM THE GOVERNOR.

MR. CHAIRMAN : I have received messages from the Governor of Madras recommending to the Legislative Council the consideration of the following Bills :

(1) The Madras Appropriation (No. 2) Bill, 1961.

(2) The Madras Appropriation (No. 4) Bill, 1961.

(3) The Madras Appropriation (No. 3) Bill, 1961.